7th December 1961]

1961, due to (1) the non-receipt of bills in time from those teachers and (2) receipt of defective bills which had to be returned for rectification of defects.

(இ) The District Boards have been abolished on 2nd October 1961. Instructions have been issued to the successor bodies, the Panchayat Union Councils, to pay salaries to teachers on the first working day of each month.

### *Sengal Odai Scheme*

* 2143 *Q.*—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Home be pleased to state when it is proposed to take up the execution of the Sengal Odai Scheme in Udayarpalayam taluk, Andimadam firka, sanctioned as early as in 1959?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A revised estimate amounting to Rs. 79,000 for the Sengal Odai Scheme in Udayarpalayam taluk in Tiruchirappalli district has been sanctioned in July 1961. The work will be taken up for execution early after calling for and settlement of tenders by the Superintending Engineer, Tiruchirappalli Circle.

### *Village officers*

*** 2144 *Q.*—SRI K. ANBAZHAGAN :** கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தமிழ்நாடு கிராம உத்தியோகஸ்தர்கள் சங்கம், அம்பாசமுத்திரம் வட்ட மாநாட்டில் 1960-ம் ஹு ஜூலைமீ 28உ நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் அமைச்சருக்குக் கிடைத்தனவா;

(இ) வைத்தியச் சலுகை, குழந்தைகட்கு கல்விச் சலுகை ஆகியவை அவர்கட்கு முழு அளவில் கிடைக்கச் செய்வது பற்றி அரசாங்கம் எடுத்த முடிவு யாது?

(உ) கிராம உத்தியோகத்தினரது வேலை பளு மிகவும் பெருகி வந்துள்ளதால் அதைக் குறைப்பதுபற்றி அரசாங்கத்தின் கருத்து யாது?

**THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) No, Sir.**

(இ) The village officers and servants have been given the same concessions as those given to the N. G. G. Os. The children of village officers are now given full fee remission for Forms I to III, and for Forms IV to VI half-fee concession if the total income of the parent exceeds Rs. 100 per mensem and full fee concession in other cases. The children of village servants are eligible for full fee remission for Forms I to VI.

(உ) The Government have not yet arrived at any decision in the matter.

**SRI K. ANBAZHAGAN :** தலைவர் அவர்களே, கிராம உத்தியோகத்தில் இருப்பவர்களுடைய மாத வருமானம் 100 ரூபாய்க்கு மேல் இருந்தால் சலுகை கிடையாது என்றும், இல்லாதவர்கள்

குழந்தைகளுக்குச் சலுகை உண்டென்றும் பாகுபடுத்துவது சரியா? என்.ஜி.ஓ.-க்களுக்கு இருப்பது போலவே மாத வருமானத்தைக் கருதாமல் இந்தச் சலுகையை எல்லா கிராம உத்தியோகஸ்தர்களுடைய குழந்தைகளுக்கும் அளிப்பதற்கு அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: இதிலே வருமானம் எவ்வளவு என்பதுதான் குறிக்கோள். குறைந்த வருமானம் உள்ளவர்களுக்கு இந்தச் சலுகை அளிக்கவேண்டும் என்பதுதான் கருத்து.

SRI S. NAGARAJA MONIGAR: இந்த கிராமாதிகாரிகளிலே எத்தனை பேர் ஆரியர்கள் இருக்கிறார்கள்? எத்தனை பேர் திராவிடர்கள் இருக்கிறார்கள்?

THE HON. SRI M. A. MANICKAVELU: திராவிட நாட்டிலே எல்லோரும் திராவிடர்கள் தான்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR: கிராமாதிகாரிகளுடைய வேலை இப்போது மிகவும் அதிகமாக ஆகியிருக்கிறது. நம் நாட்டின் அபிவிருத்தித் திட்டங்கள் சம்பந்தப்பட்ட எல்லாப் புள்ளிவிவரங்களையும் அவர்கள் தான் சேகரிக்கவேண்டியதாக இருக்கிறது. ஆகவே ஒரு நாளைக்கு 24 மணி நேரமும் அவர்களுக்கு வேலை இருப்பதனால் மற்ற என்.ஜி.ஓ.க்கள் எல்லோருக்கும் கொடுக்கிற சலுகைகளைக் கூட இவர்களுக்கும் மாத வருமானத்தைக் கணக்கில் எடுத்துக்கொள்ளாமல் கொடுப்பதற்குத் தடையாக இருக்கக்கூடிய காரணம் என்ன? எல்லோருக்குமே அந்தச் சலுகையைக் கொடுக்க முயற்சிப்பார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU: இப்போது ஓரளவு வசதி செய்து கொடுத்திருக்கிறோம். இவர்கள் முழு நேரம் ஊழியர் அல்ல. அதை அந்த அடிப்படையில் மாற்றி அமைத்துவிட்டால் எல்லாம் சரியாகப் போய்விடும். இந்தச் சமயத்தில் எல்லோரும் கிராமாதிகாரிகளைப்பற்றி அக்கறை எடுத்துக்கொள்வது சகஜம் தான்.

SRI K. ANBAZHAGAN: கிராம அதிகாரிகளுக்கு வைத்திய நிர்வாக அதிகாரி உதவியில்லை என்ற புகார் இருக்கிறதே, அந்தச் சலுகையையும் அளிக்க நிர்வாக அதிகாரிகளுக்குத் தக்க உத்தரவு கொடுக்க முன்வருவார்களா? இதற்காக மூன்று அமைச்சர்களைக்கொண்ட குழு நியமிக்கப்பட்டதே, அந்த மூவர் குழு செய்த முடிவு என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU: அமைச்சர் குழு இதைப்பற்றி பரிசீலனை செய்தது. இப்போது நாம் டிரான்ஸிஷனல் ஸ்டேஜில் இருக்கிறோம். ஆகையால் பெரிய மாறுதல் இந்தச் சமயத்தில் வேண்டாமென்று ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது. குறிப்பாக ஏதாவது புகார் செய்யப்பட்டால் பரிசீலனை செய்யத் தயார்.

7th December 1961]

**SRI M. K. MARIAPPAN :** கிராம உத்தியோகஸ்தர்கள் சங்கத்தில் தலையாரி, வெட்டியான் இவர்கள் சேர்க்கப்பட்டிருக்கிறார்களா? இல்லையென்றால் அவர்கள் தங்களுக்குள் ஒரு சங்கத்தை அமைத்துக்கொண்டால் அதற்கு சர்க்கார் அங்கீகாரம் அளிப்பார்களா?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** வில்லேஜ் சர்வெண்ட்ஸ் என்ற காடிகரியில் அவர்களும் வருகிறார்கள்.

*Deaths due to rat-poisoning*

***2145 Q.—SRI S. M. ANNAMALAI :** கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

நம்மாநிலத்தில் 1961-ம் ஆண்டில் இதுவரை எத்தனை பேர்கள் எலிபாஷாணம், மூட்டைப்பூச்சி மருந்து தின்றதினால் இறந்துள்ளனர்?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** No information is available, as deaths due to these causes are not separately registered.

**SRI S. M. ANNAMALAI :** அடிக்கடி பத்திரிகையில் மூட்டைப் பூச்சி மருந்தை உண்டு பலர் மரிப்பதாகச் செய்திகள் வருகின்றனவே. இந்தத் தற்கொலைகளைத் தடுக்க மூட்டைப் பூச்சி மருந்து விற்பனையைக் கட்டுப்படுத்த சர்க்கார் முன்வருவார்களா?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** இந்த மருந்து வழங்குவதில் கடுமையான ஏற்பாடு இருக்கிறது. அதோடு இந்த உலகத்தைவிட்டு மேல் உலகத்திற்குப் போக வேண்டுமென்ற முடிவுக்கு வந்துவிட்டவர்களை எப்படிப் பாதுகாப்பது? கூடிய வரையில் பாதுகாக்கிறோம்.

*Karugamputhur Panchayat Board*

***2146 Q.—SRI V. K. KOTHANDARAMAN :** கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு ஜில்லா, வேலூர் தாலூகா கருகம்புத்தூர் பஞ்சாயத்து போர்டு தலைவர்பேரில் மேற்படி பஞ்சாயத்து போர்டு அங்கத்தினர்கள் புகார் லெட்டர் வந்ததா?

(இ) என்னென்ன புகார், என்னென்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது?

(உ) இல்லையென்றால், அதற்கான காரணமென்ன?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** (அ) Yes, Sir. Several petitions have been received by the Collector of North Arcot.